இதழ் 22 | அக்டோபர் | 2020

# தாயகம்




## தடுப்பூசிகள் ஆபத்தா?

## உள்ளே

தடுப்பூசி ஆபத்துகளும்
அதற்கெதிரான
போராட்டங்கள் குறித்தும்.

தாயகம் இதழ்-22

வெளியீடு : தமிழர் கழகம்

*1990* களில் மஞ்சள்காமாலைத் தடுப்பூசி பூதாகரமாகப் பிரச்சாரம் செய்யப்பட்டது. மஞ்சள் காமாலை ஒரு ஆட்கொல்லி நோய் என்பது போலவும், அந்நோய் வந்தவர்கள் மிக அதிக அளவில் மரண மடைகிறார்கள் என்பது போலவும் அதிலிருந்து மக்களைக் காக்க மஞ்சள் காமாலைத் தடுப்பூசி பாதுகாவலனாக வந்திருக்கிறது என்றும் உலகம் முழுவதும் விளம்பரம் செய்யப்பட்டது.

இதில் துக்கம் என்னவென்றால் இந்தியா போன்ற தெற்காசிய நாடுகள் நம்பியதுதான்.

ஏனென்றால் மஞ்சள் காமாலை நோய்க்கு மருந்துகள் எதுவும் இல்லாமல் உணவுமுறையை ஒழுங்குபடுத்துவதிலேயே குணமாகும் என்பதை உலகிற்குச் சொன்ன

நாடு நம்முடையது. ஆங்கில மருத்துவத்தில் மஞ்சள் காமாலைக்கு மருந்தில்லாத இந்த நூற்றாண்டிலும் பாரம்பரிய மருத்துவ அறிவால் நோயிலிருந்து விடுபடும் முறையை உலக பல்கலைக் கழகங்களுக்கு நாம் கற்றுத்தந்திருக்கிறோம்.

*உலக சுகாதார நிறுவனத்தின் (World Health Organisation) பரிந்துரைப்படி 1989-91 களில் அமெரிக்காவில் தெற்கு கலிபோர்னியா வைச் சேர்ந்த கறுப்பின மற்றும் லத்தீன் அமெரிக்கக் குழந்தைகளுக்கு அம்மைத் தடுப்பூசி செலுத்தப்பட்டது.
இதே ஊசி, இதே ஆண்டுகளில் பல ஆப்பிரிக்க நாடுகளிலும் அந்தந்த குழந்தைகளின் பெற்றோர்களுக்குத் தெரியாமல் செலுத்தப்பட்டது.

அது வரைக்கும் அம்மை நோய் என்றால் என்னவென்றே அறியாத

அவர்கள் ஊசியின் விளைவால் பலவிதமான பாதிப்புகளுக்கு ஆளானார்கள்.

பல குழந்தைகள் இறந்தும் போனார்கள்.

பலத்த எதிர்ப்பிற்குப் பிறகு உலக சுகாதார நிறுவனம் அந்த மருந்தை சந்தையில் இருந்து விலக்கிக்கொண்டது.

*1997ஆம் ஆண்டில் நடத்தப்பட்ட அமெரிக்க அரசு ஆய்வில் மஞ்சள் காமாலைத் தடுப்பூசியும் அம்மைத் தடுப்பூசி போன்றே பதிமூன்று விதமான புதிய நோய்களை ஏற்படுத்துவதாகக் கண்டறிந்தனர்.

வலிப்பு, ஜன்னி, கண் பார்வை பாதிப்பு, மூளைக் காய்ச்சல் போன்ற நோய்கள் ஏற்பட இந்த மஞ்சள் காமாலைத் தடுப்பூசிகள் காரணமாக இருப்பதைக் கண்டறிந்த பிறகு

1997 ஆம் ஆண்டில் அமெரிக்க அரசு கட்டாயத் தடுப்பூசி சட்டத்தை நீக்கியது.

கட்டாயச் சட்டத்தை நம்பி ஏராளமான தடுப்பூசி மருந்துகளை உற்பத்தி செய்து குவித்திருந்த அமெரிக்க மருந்துக் கம்பெனிகள் திணறின.

அமெரிக்காவில் இந்த விஷயம் நடந்து முடிந்திருந்த போது இந்தியாவில் நடைபெற்ற ஒரு சம்பவம் கவனிக்கப்பட வேண்டியதாகும்.

உலகப் பணக்காரரர் திருவாளர். பில்கேட்ஸ் அவர்களின் கரிசனம் மிகுந்த பார்வை இந்தியக் குழந்தைகளின் மீது திரும்பியது. பில்கேட்ஸ் தனது தொண்டு நிறுவனத்தின் மூலம் ஆந்திர மாநிலத்தின் 4.5 லட்சம் குழந்தைகளுக்கு மஞ்சள் காமாலை தடுப்பூசிகள் இலவசமாக போட்டார். இந்த தடுப்பூசி மருந்துகள் அமெரிக்காவில் இருந்துதான்

வரவழைக்கப்பட்டது என்பதை தனியாகக் கூற வேண்டிய அவசியம் இல்லை தானே.

*அமெரிக்காவில் 1983 இல் 10 தடுப்பூசிகள் மட்டுமே குழந்தைகளுக்கு பரிந்துரைக்கப்பட்டன.

அப்போது மூளை வளர்ச்சி குறைவு உள்ள அமெரிக்க குழந்தைகள் பத்தாயிரத்தில் ஒருவர் தான்.

2008 ஆம் ஆண்டு குழந்தைகளுக்கு பரிந்துரைக்கப்படும் தடுப்பூசிகளின் எண்ணிக்கை 36. இப்போது அமெரிக்கக் குழந்தைகளின் மூளை வளர்ச்சிக்குறைவு விகிதம் நூற்றைம்பதில் ஒருவர்.

3000 மடங்கு அதிகரிப்பு!

(அமெரிக்க தடுப்பூசித் திட்டங்களைப் பின்தொடர்ந்து தான் இந்தியா செல்கிறது என்பதை தனியே சொல்ல வேண்டிய அவசியம் இல்லை)




*1870 - 71 களில் அம்மை நோய் ஜெர்மனியில் பெரும் தாக்கத்தை படுத்தி இருந்தது. சுமார் 10 லட்சம் பேருக்கு அம்மை நோய் தோன்றியது. இவர்களில் ஒரு லட்சத்து இருபதாயிரம் பேர் இறந்து விட்டனர். இறந்தவர்களில் நூற்றுக்கு 96 பேர் அம்மை குத்திக் கொண்டவர்கள்.

இம்மருந்திற்கு எதிராய் மருத்துவர்களில் பலரும், விஞ்ஞானிகளில் ஒரு பிரிவினரும் உலகம் முழுவதும் இணைந்து தங்கள் எதிர்ப்புகளை வெளிப்படுத்தினார்கள்.

இதைத்தொடர்ந்து 1880 ஆம் ஆண்டில் உலக தடுப்பூசி எதிர்ப்புச் சங்கம் (International Anti&Vaccination league) உருவாக்கப்பட்டது.

இதன் மாநாடு 1880 டிசம்பரில் பாரீஸில் நடைபெற்றது. இதில் பல நாடுகளில் இருந்து பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். தடுப்பூசிகளை எதிர்க்கும் பத்து தீர்மானங்கள் அம்மாநாட்டில் நிறைவேற்றப்பட்டன.

*1853 ஆம் ஆண்டு இங்கிலாந்தில் அம்மை குத்துதலைக் கட்டாயமாக்கும் சட்டம் அமுலுக்கு வந்தது. இதைத் தொடர்ந்து உலகின் பல பகுதிகளில் தடுப்பு மருந்துகள் பரவின. கட்டாயச் சட்டங்களும் அமலுக்கு வந்தன.

அம்மை நோய்த்தாக்கத்தில் இம்மருந்துகள் எவ்வித மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை என்பதோடு புதிய பல எதிர் விளைவுகள் ஏற்படுவதும் வெளிப்பட்டது

*1870 - 71* களில் அம்மை நோய் ஜெர்மனியில் பெரும் தாக்கத்தை படுத்தி இருந்தது.

சுமார் *10* லட்சம் பேருக்கு அம்மை நோய் தோன்றியது. இவர்களில் ஒரு லட்சத்து இருபதாயிரம் பேர் இறந்து பட்டனர். இறந்தவர்களில் நூற்றுக்கு *96* பேர் அம்மை குத்திக் கொண்டவர்கள்.

**1889* ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் அம்மை மருந்தின் விளைவுகளை ஆராய ராயல் கமிஷன் *(Royal commission on Vaccination)* ஏற்படுத்தப்பட்டது. ஏழு ஆண்டுகள் விசாரணைக்குப் பிறகு ராயல் கமிஷன் தன் அறிக்கையை வெளியிட்டது.

*1896* இல் வெளியிடப்பட்ட அறிக்கையைத் தொடர்ந்து இங்கிலாந்தில் கட்டாயத் தடுப்பூசி சட்டம் நீக்கப்பட்டது.

*ஜெர்மனியில் ஏற்பட்ட தடுப்பூசி மருந்துகளின் பாதிப்பைத் தொடர்ந்து அந்நாட்டின் மத்திய அமைச்சர் பிஸ்மார்க் *1888* ஆம் ஆண்டில் மாநில அரசுகளுக்கு தடுப்பூசி பற்றிய சுற்றறிக்கையை அனுப்பினார்.

சொரி, சிரங்கு, தோல் பாதிப்புகள் போன்ற புதிய நோய்கள் வருவதற்கு இந்த அம்மை மருந்து காரணமாகி விட்டது.

பசுவின் சீழிலிருந்து தயாரிக்கப்படும் அம்மை மருந்து நல்லதென்று பயன்படுத்தினோம்.

ஆனால் அம்மை நோயை விட அந்த மருந்து கூடுதலான தீங்குகளைச் செய்துவிட்டது" என்று தொடங்கும் அந்த அறிக்கையில் அம்மை மருந்தின் பயங்கரங்களை கண்டிப்புடன் தயவு தாட்சண்யம் இல்லாமல் மாநில அரசுகளுக்குத் தெளிவு படுத்தியிருந்தார்.

இந்த அறிக்கையைத் தொடர்ந்து ஜெர்மன் மாநில அரசுகள் கட்டாயத் தடுப்பூசி சட்டத்தை கைவிட்டன.

*கி.பி.1796 இல் எட்வர்ட் ஜென்னர் என்பவர் அம்மை மருந்தைக் கண்டுபிடித்தார்.

இந்த தடுப்பு மருந்திற்கு *Vaccination* என்று பெயர் சூட்டினார் எட்வர்ட் ஜென்னர்.

*Vaccines* என்ற பசுவைக்குறிக்கும் லத்தீன் மொழி சொல்லிலிருந்து இந்தப் பெயர் பிறந்தது.

*ஆரோக்கியமான குழந்தைகளுக்கு மூளை மற்றும் நரம்பியல் தொடர்பான பாதிப்புகள் ஏற்படுகின்றன என்பதை ஆய்வுகள் நிரூபித்துள்ளன. அமெரிக்காவில் தடுப்பூசிகளால் பாதிக்கப்பட்ட குழந்தைகளின் பெற்றோர்கள் தொடுத்த வழக்குகளை விசாரிக்க தனியாக தடுப்பூசி



வழக்குகளுக்கான நீதிமன்றம் (U.S.Vaccine Court) செயல்படுகிறது.

1980 லிருந்து தடுப்பூசி பாதிப்பு நிவாரணத்திட்டம் நடப்பிலுள்ளது.

அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற மருந்து வணிகத்தை முன்னெடுத்துச் செல்லும் நாடுகளில் தடுப்பூசி பாதிப்புகளுக்கு எதிரான நஷ்ட ஈடாக கோடிக்கணக்கான டாலர்களை மக்கள் வரிப்பணத்திலிருந்து அரசாங்கங்கள் செலவழித்து வருகின்றன.

*மருத்துவம் - உலகத்தால் போற்றப்படும் உயர்ந்த அறிவியலாக, சந்தேகத்திற்கு இடமற்ற தூய்மையான துறையாக பல நூற்றாண்டுகளாய் நம்பப்பட்டு வருகிறது. மனிதர்கள் தங்கள் உயிருக்குத் தரும் மதிப்பை அது சார்ந்த மருத்துவத் துறைக்கும் தந்து வந்திருக்கிறார்கள். மருத்துவத்தின் துவக்க காலத்தில் அது ஒரு சேவையாகவும், பிற மனிதர்களுக்குச் செய்யப்படும் பேருதவியாகவும் கருதப்பட்டது.

மருத்துவ அறிவியலின் வரலாறு என்பது இயற்கையை உணர்ந்து கொள்ளும் விருப்பத்தோடு கூடிய பல தனிமனிதர்களின் அர்ப்பணிப்பு உணர்வுகளால் பின்னப்பட்டது.

ஆனால் இன்றைய உலகம் நேர்மாறானது; தொழில் மயமானது.

லாபம் என்ற ஒற்றை வார்த்தை

இவ்வுலகின் பொருட்கள் முதல் மனிதர்களின் உணர்வுகள் வரை தின்று தீர்த்துக் கொண்டிருக்கிறது.

பணம் தரும் என்று நம்பப்படுகிற எந்தத் துறையையும் வணிக வெறியர்கள் விட்டு வைக்கவில்லை.

*கனடாவின் ***VRAN (Vaccination Risk Awareness Network)*** அமைப்பு உலக மக்களுக்கு ஒரு வேண்டுகோளை முன்வைக்கிறது.

"மனித வாழ்வின் விலைமதிப்பற்ற செல்வம் குழந்தைகள் தான்.

நாம் மிக அதிக கவனம் செலுத்த வேண்டியவர்களும் அவர்களே.

தயவுசெய்து உங்கள் குழந்தைகளுக்கு தடுப்பூசி போடும் முன் நன்கு ஆராய்ந்து செயல் படுங்கள்" .




# அமெரிக்காவில் நடக்கும் தடுப்பூசிக்கு எதினான மக்கள் போராட்டம்

VRAN என்னும் இந்த அமைப்பு தடுப்பூசிகளால் பாதிக்கப்பட்ட குழந்தைகளின் பெற்றோர்களால் உலகம் முழுவதும் ஏற்படுத்தப்பட்ட அமைப்பு.

**நன்றி: 'பஃறுளி ஆறும் பாண்டியர் ஊரும்' முகநூல் பக்கம்.**



அமெரிக்காவில் மாற்று மருத்துவம் வேண்டியும் தடுப்பூசிகளுக்கு எதிராகவும் செயல்பட்ட 60 மருத்துவர்கள் ஒரே ஆண்டில் மர்மமான முறையில் இறந்தனர். இதில் பலர் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

மரபு வழி மருத்துவம் வளர்ந்தால் மருந்து கம்பெனிகளும், மருத்துவமனைகளும் கொள்ளையடிக்க முடியாது. அதனால் தான் இந்த படுகொலைகள்.

# தமிழ்நாட்டைச் சூழும் தடுப்பூசி ஆபத்துகள்.

தமிழ்நாட்டில் தடுப்பூசிக்கு ஆதரவான மனநிலையை தான் சில அறிவியலாளர்கள் மற்றும் சூழலியலாளர்கள் என தம்மை அழைத்துக் கொள்வோர் உருவாக்கி வருகின்றனர்.

அனைத்து நோய்களுக்கும் மரபு வழியிலான தீர்வுகள் உண்டு. சில நாடுகளில் மரபு மற்றும் நவீன முறைகளை ஒருங்கிணைத்து மருத்துவம் மேற்கொள்கிறார்கள்.

நம் உடலை புரிந்து கொண்டாலே நோயையும் அதற்கான தீர்வையும் அறிந்து கொள்ளலாம். தடுப்பூசி என்பது தேவையற்ற ஒன்று தான். கார்ப்பரேட் நிறுவனங்களின் லாப வெறியையும் உலகை கட்டுப்படுத்த முயலும் அவர்களின் திட்டங்களையும் எதிர்த்து வெல்வோம்.

---